# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

மலர் 4 | இதழ் 12 | பிப்ரவரி 10, 2018 | வருடச்சந்தா ரூ 100/- **Volume : 4 | Issue 12 | February 10th, 2018 | Annual Subscription Rs. 100/-**



**என் மனைவியை எதிர்கொள்வது எவ்வாறு?**

# பகவத் பாதை தமிழ் மாத இதழ்



"மனோரீதியான அகப் பிரச்சினைதான் உண்மையான பிரச்சினை. மனோரீதியான பிரச்சினைக்குத் தீர்வு காண்பதுதான் உண்மையான தீர்வு.

மனதின் பிரச்சினைகளை நாம் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளும் போது, அவை தாமாக ஓடி மறைய ஆரம்பித்து விடுகின்றன.

அகத்தில் பிரச்சினையற்ற நமக்கு புறச்செயல்களை நெறிப்படுத்துவதும் எளிதாக அமைந்து விடும்".

– ஸ்ரீ பகவத்

## சென்னையில் 2 நாள் ஞான முகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

நாள் : **10 & 11** மார்ச் 2018 (சனி, ஞாயிறு)
நேரம் : காலை 9.30 மணி முதல் மதியம் 1.00 மணி வரை
இடம் : சாஸ்திரி ஹால், நல்லி எதிர்புறம், மைலாப்பூர், சென்னை.

**பொருள் :** ஞானப்புரிதல் | அகம்-புறம் | நான் யார்? | மனோலயம் - மனோ நாசம் | புரிதலை உறுதிப்படுத்துதல்

முன்பதிவிற்கு **ஸ்ரீ பகவத் மிஷன்,** சென்னை.

திரு. **இரவிச்சந்திரன்** **94444 02986**
திரு. **பாலசுந்தரம்** **99405 34355**
திருமதி **முத்துலட்சுமி** **95512 53636**

செலவு பகிர்வு ரூ. **500 /-** நபர் ஒருவருக்கு

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





Sri Bagavath Mission
31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555
www. sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com



This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075


## சென்னை காமராஜர் அரங்கத்தில் சிறப்பு முழுநாள் ஞான முகாம்

ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் புரிதலின் மூலம் ஞானத்தெளிவு பெற்று மனத்துயரங்களில் இருந்தும் பிரச்சினைகளிலிருந்தும் விடுபட்டு விடுதலை அடைந்தவர்கள் பலர் இருக்கிறார்கள். இருப்பினும் இந்த மெய்ஞானம், அதைத்தேடுதல் கொண்டவர்களை மட்டுமல்லாது அகப் பிரச்சினைகளால் அல்லல்படுவோர் அனைவரையும் சென்றடைய வேண்டும்.

நாம் எத்தனையோ ஞானமுகாம் நடத்தி வருகிறோம். இந்த ஞான முகாம்களில் நூற்றுக்கணக்கானவர்கள் மட்டுமே கலந்து கொள்கிறார்கள். இது போதாது. இன்னும் பல்லாயிரக் கணக்கானோரை சென்றடைய வேண்டியுள்ளதால் இதற்கு அடுத்தபடியாக ஆயிரத்து ஐநூறு அன்பர்கள் அமரும் அளவிற்கு சென்னையிலுள்ள **காமராஜர் அரங்கத்தில் வருகின்ற 2018 ஆம் ஆண்டு செப்டம்பர் 2ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமை சிறப்பு முழுநாள் ஞானமுகாம் நடத்த ஏற்பாடு செய்துள்ளோம்.** இம்மாபெரும் நிகழ்ச்சி ஞானத்தேடுதல் கொண்ட அனைவருக்கும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களால் புரிதலாக எளிமையாக்கப்பட்ட ஞானத்தை அனைவருக்கும் அறிவிக்கும் அறிவிப்பாக அமைய வேண்டும். இந்த சிறப்பு ஞானமுகாமில் ஐயா வழங்கும் புரிதலில் ஞானத்தெளிவு பெற்ற **ஹீலர் பாஸ்கர்** அவர்களும், **ஹீலர் உமர்ஃபாருக்** அவர்களும் கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றவுள்ளார்கள். இவர்களுடன் நாம் அனைவரும் கலந்துகொள்வதோடு புதியவர்களையும் அறிமுகப்படுத்துவது இச்சமுதாயத்திற்கு நாம் செய்யும் மிகச்சிறந்த பணியாகும்.

இச்சிறப்பு ஞானமுகாமை பெரிய அளவில் நடத்த இருப்பதால் ஞானமுகாம் நடைபெறும் அரங்கம் வாடகை கட்டணம், பார்க்கிங் கட்டணம், மதிய உணவுக்கான செலவு என நாம் பல செலவுகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது. ஒரு நபருக்கு ரூ. 400/- வரை செலவாகும் என கணிக்கப்பட்டுள்ளது. இருப்பினும் ஞானத்தை அனைவருக்கும் கொண்டு செல்ல வேண்டும் என்ற காரணத்தால் சலுகை கட்டணமாக நபருக்கு ரூபாய் 250/- என நிர்ணயத்துள்ளோம். பற்றாக்குறையை வரும் நன்கொடைகளை கொண்டு சமன்படுத்தலாம் என எண்ணியுள்ளோம்.

மேலும் இந் நிகழ்ச்சிக்கு 100 தன்னார்வத் தொண்டர்கள் (Volunteers) தேவைப்படுகிறார்கள். எனவே வாய்ப்புள்ளவர்கள் நன்கொடைகளை வழங்குமாறும் இந்நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற தன்னார்வத் தொண்டர்களாக இணைந்த தங்களது சேவையை வழங்குமாறும் அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஞானத்தை அனைவருக்கும் எடுத்துச்செல்ல வேண்டும் என்ற இந்த முயற்சிக்கு தங்களின் மேலான ஆலோசனைகளையும் வழங்குமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அனைவரும் வருக! ஞானத் தெளிவு பெறுக!

# என் மனைவியை எதிர்கொள்வது எவ்வாறு?


- ஸ்ரீ பகவத்



இருளடைந்த முகத்துடன் அவர் காணப்பட்டார். மிகுந்த தயக்கத்துடன்தான் என்னிடம் பேசினார்.

அவர் வந்த போது வேறு சிலரும் என்னைச் சந்திக்க வந்திருந்தனர். அவர்கள் மத்தியில் அவர் தனது பிரச்சினையைக் கூறத் தயங்கினார்.

மற்றவர்களை விலகி இருக்குமாறு கூறி விட்டு அவரிடம் தனியாகப் பேசினேன்.

“எனது மனைவியை என்னால் சமாளிக்க முடியவில்லை. எனக்கு ஒரு குழந்தையும் இருக்கிறது. அந்தக் குழந்தையிடம் கூட அவள் முரட்டுத்தனமாக நடந்து கொள்கிறாள். எனக்கு எவரிடமும் சண்டை போடும் பழக்கம் கிடையாது. நான் அவளிடம் பேசாமலேயே இருந்து விடுவேன். நான் எப்படி இருந்தாலும் அவள் விடுவதில்லை. என்னுடனும் குழந்தையிடமும் எப்போதும் ஏதாவது சொல்லி சண்டை போட்டுக் கொண்டிருக்கிறாள். விவாகரத்துதான் வழி என்று தோன்றினாலுங்கூட குழந்தையை உத்தேசித்து அந்த முடிவுக்கும் வர முடியவில்லை. நான் என்ன செய்வது? அவளை எவ்வாறு சரிப்படுத்துவது?"

-இப்படி அவர் தனது பிரச்சினையைக் கூறி முடித்தார்.

இவருக்கு என்ன ஆலோசனை வழங்குவது?

அவரிடம் ஒரு கேள்வியைக் கேட்டேன்.

"உங்களுக்கு குடும்பத்திலுள்ளவர்கள் சரியில்லை. அதனால் அவர்களால் தினமும் உங்களுக்குப் பிரச்சினை என்று வைத்துக் கொள்வோம். அதுபோல் நீங்கள் வேலை பார்க்கும் அலுவலகத்திலும் அங்கு வேலை செய்பவர்களால் பிரச்சினை என்று வைத்துக் கொள்வோம். இப்படித் தினமும் உங்களுக்கு அடுக்கடுக்கான பிரச்சினைகள் வந்து கொண்டிருப்பதாக வைத்துக்கொள்வோம்...

"ஆனால் நீங்கள் மனதளவில் எந்த பாதிப்பும் இல்லாமல் அமைதியாகவும், நிம்மதியாகவும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்படி நீங்கள் மனதளவில் நிம்மதியாக இருக்கும் பட்சத்தில், நீங்கள் எதிர்கொள்ளும் புறப்பிரச்சினைகளைப் பிரச்சினைகள் என்று கூற முடியுமா? அவை எவையும் உங்கள் மனதை பாதிக்காத நிலையில் அவைகள் பிரச்சினைகளே அல்ல...

"இதுபோல் இன்னுமொரு நிலை. உங்கள் குடும்பத்தில் உள்ளவர்கள் அனைவரும் இனிமையானவர்கள் என வைத்துக் கொள்வோம். அவர்கள் உங்களுக்குத் தேவையானதை மட்டுமே செய்கிறார்கள். தேவை இல்லாதவை எதனையுமே செய்வதில்லை. அதுபோல் நீங்கள் பணிபுரியும் அலுவலகத்திலுள்ள அனைவருமே இனிமையானவர்கள் என வைத்துக் கொள்வோம். அவர்களாலும் உங்களுக்கு எந்தப் பிரச்சினையும் ஏற்படுவதில்லை. புறத்தைப் பொறுத்தவரையிலும் உங்களுக்கு எந்தவிதமான பிரச்சினைகளும் கிடையாது...

"ஆனால் மனதளவில் மட்டும் நீங்கள் நிம்மதியில்லாமல் இருக்கிறீர்கள். அப்படி ஆகிவிடுமோ, இப்படி ஆகிவிடுமோ என எதனையாவது எண்ணி எப்போதும் டென்சனுடனும், பயத்துடனும், மனவேதனையுடனும் இருந்து வருகிறீர்கள் என வைத்துக் கொள்வோம்...

"இந்த இரண்டு நிலைகளுள் உங்களுக்குப் பிடித்தமான நிலை எது? முதலாவது நிலையா அல்லது இரண்டாவது நிலையா? முதலாவது நிலையில் நீங்கள் எப்போதும் பிரச்சினைகளுடனேயே இருக்கிறீர்கள். ஆனால் மனநிம்மதியுடனும் மன அமைதியுடனும் இருக்கிறீர்கள். இரண்டாவது நிலையில் உங்களுக்கு எந்தப் பிரச்சினையும் கிடையாது. ஆனால் மனதளவில் மட்டும் நீங்கள் நிம்மதியில்லாமல் இருக்கிறீர்கள். இந்த இரண்டு நிலைகளில் உங்களுக்குப் பிடித்தமான நிலை எது?"

- இப்படி அவரிடம் கேள்வி கேட்டேன்.

முதலாவது நிலையைத்தான் அவர் தேர்வு செய்தார்.

எவராக இருந்தாலும் முதல் நிலையைத்தான் தேர்வு செய்வார்கள்.

அப்படியென்றால் என்ன பொருள்?

மனம் சரியாக இருந்தால் மற்றவை எல்லாம் இரண்டாம் பட்சமே.

எத்தனை பிரச்சினைகள் நம்மைத் தாக்கினாலுங்கூட மனதளவில் நாம் பிரச்சினை இல்லாமலிருந்தால் அதுதான் சிறந்த நிலை.

மனதில் ஏதாவது பிரச்சினை இருந்தால் அதைத்தான் பிரச்சினை என்று கூற முடியுமே தவிர

புறப் பிரச்சினைகளைப் பிரச்சினைகள் என்றே கூற முடியாது.

பிரச்சினைகளோடு இருந்த மனது, பிரச்சினைகளிலிருந்து விடுபட்டு விட்டால் அதுதான் சரியான நிலை.

புறத்தில் பிரச்சினைகளே இல்லாமல் பார்த்துக் கொள்வது உண்மையான தீர்வு கிடையாது.

மனதளவில் ஏற்படும் தீர்வுதான் உண்மையான தீர்வு.

மனோரீதியான பிரச்சினைகளுக்கு எவ்வாறு தீர்வு காண்பது?

பிரச்சினைகளின் மூலஸ்தானமே நம்முடைய மனதுதான். அந்த மூலஸ்தானத்தை அணுகுவது எவ்வாறு?

புறப்பிரச்சினைகளை எடுத்துக் கொண்டால் ஒவ்வொரு பிரச்சினையும் ஒவ்வொரு விதமாகவே இருக்கும். எல்லா பிரச்சினைகளையும் எல்லோராலும் தீர்க்க முடியாது.

ஆனால் மனோரீதியான பிரச்சினை அப்படியன்று. அது எப்போதும் ஒரே மாதிரியாக இருக்கும் ஒரே ஒரு பிரச்சினைதான் அது. அதனால் அதற்குப் பலவகையான தீர்வுகள் தேவை இல்லை.

மனோரீதியான அனைத்துப் பிரச்சினைகளுக்கும் ஒரே ஒரு தீர்வுதான்.

அனைத்துப் பிரச்சினைகளுக்கும் ஒரே ஒரு மருந்து போதும்.

இந்தத் தீர்வை நாம் அடைவதற்கு முன்னால் நாம் இரண்டு விதமான முடிவுகளை எடுத்துக் கொண்டாக வேண்டும்.

அந்த முடிவுகளை நாம் எடுக்காத பட்சத்தில் நாம் இத்தகைய தீர்வைக் கொண்டு வரமுடியாது.

அதென்ன முடிவுகள்?

புதிதாக எதுவும் இல்லை. அவை இரண்டுமே நாம் ஏற்கனவே பார்த்தவைதாம்.

**மனரீதியான அகப்பிரச்சினைதான் உண்மையான பிரச்சினை.**

- என்று தீர்மானிப்பதுதான் முதலாவது முடிவாகும்.

**மனரீதியான பிரச்சினைக்குத் தீர்வு காண்பதுதான் உண்மையான தீர்வு.**

என்று தீர்மானிப்பதுதான் இரண்டாவது முடிவாகும்.

இதனால்...

"அவரால் எனக்குத் துன்பம். இவரால் எனக்கு கஷ்டம். அது அப்படி நடக்காததால் எனக்கு துன்பம். இது இப்படி நடக்காததால் எனக்கு கஷ்டம்."

எனப் புறச்செயல்களின் மீது குற்றம் சுமத்துவதை நிறுத்தி விடுகிறோம்.

புறப்பிரச்சினைகள் பிரச்சினையே அல்ல என்ற முடிவுக்கு வந்த பிறகு அகப்பிரச்சினைக்கு வருகிறோம்.

அகப்பிரச்சினையை மட்டும் இனி நாம் தீர்வு கண்டால் போதும்.

அகப்பிரச்சினையின் தீர்வுதான் உண்மையான தீர்வு.

அகப்பிரச்சினைக்கு நாம் எவ்வாறு தீர்வு காண்பது?

சில வருடங்களுக்கு முன்னால் நடந்த சம்பவம்.

இளம்பெண் ஒருவர் தொலைபேசியில் தொடர்பு கொண்டு என்னிடம் பேசினார்.

"நானும் ஒருவரும் காதலர்களாக இருந்தோம். ஆனால் அவர் என்னை விட்டுவிட்டு வேறொரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு விட்டார். அந்த அதிர்ச்சியை என்னால் தாங்க முடியவில்லை. மனவேதனையால் துடித்துக் கொண்டிருக்கிறேன். தூங்க முடியவில்லை. சாப்பிட முடியவில்லை. வருத்தமும் ஆத்திரமும் மாறி மாறி வந்து கொண்டிருக்கின்றன. என்ன செய்வது என்றே தெரியவில்லை. எனது வேதனையைப் போக்க ஏதாவது வழி கூறுங்கள்".

இவருடைய வேதனையை போக்குவது எவ்வாறு?

"அம்மா, உங்களுடைய வேதனையை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. உங்கள் வேதனைகளுக்கெல்லாம் காரணம் உங்கள் காதலர் உங்களுக்குச் செய்த துரோகம்தான். அவர் துரோகம் செய்யாமலிருந்தால் உங்களுக்கு இத்தகைய துயரம் ஏற்பட்டிருக்காது. அவர் துரோகம் செய்து விட்டார். உங்களுக்கும் துயரம் ஏற்பட்டு விட்டது. அவர் உங்களைத்தான் திருமணம் செய்து கொள்ள வேண்டுமென்று அவரை நீங்கள் கட்டாயப்படுத்த முடியாது. தனது சுதந்திரத்தைப் பயன்படுத்தி அவர் வேறொருவரைத் திருமணம் செய்து கொண்டு விட்டார். சட்டரீதியாக அவர் மீது உங்களுக்கு எந்த உரிமையும் கிடையாது. ஆகவே செயல்ரீதியாக நீங்கள் செய்வதற்கு எதுவும் இல்லை...

"ஆனால் அவருடைய துரோகம் உங்களைத் துடிதுடிக்க வைத்துவிட்டது. இது உங்களுடைய

மனோரீதியான பிரச்சினை. மனரீதியான உங்கள் பிரச்சினையை நீங்கள் எவ்வாறு எதிர்கொள்ள வேண்டும்? உங்களுடைய நிலையில் எவர் இருந்தாலும் இதே போன்ற உணர்ச்சிகள்தாம் ஏற்படும். துரோகத்தைச் சந்திக்கும் எவராவது மகிழ்ச்சியடைவார்களா? உங்களுக்கு ஏற்பட்ட துயரம் இயற்கையானது. வரக்கூடாத துயரம் உங்களுக்கு வரவில்லை. இந்த நிலையில் வர வேண்டிய ஒன்று தான் உங்களுக்கு வந்திருக்கிறது. உங்கள் மனதில் ஏற்பட்டிருக்கும் இந்த இயற்கையான நிகழ்வுக்கு இடையூறு செய்ய எண்ணாதீர்கள். அதற்கு முழுமனதோடு அனுமதி வழங்குங்கள். அதனை அடக்கி ஆள நினைக்காமல் அதற்கு முழுச் சுதந்திரம் வழங்கி விடுங்கள். அதற்கு நீங்கள் சுதந்திரம் கொடுக்கும் பட்சத்தில் அதுவும் அதனுடைய ஒரு பகுதியாக இருக்கும் உங்களுக்கும் அந்தச் சுதந்திரத்தை வழங்கிவிடும்."

– இப்படி அவருக்கு ஆலோசனை வழங்கினோம்.

நம் மீது கொண்ட மரியாதையின் நிமித்தம் நாம் கூறியதையும் ஏற்றுக் கொண்டார்.

மறுநாள் காலை அவரிடமிருந்து போன் வந்தது.

"மனவேதனை இன்னும் அப்படியேதான் இருக்கிறது" என்று மீண்டும் கூறுவாரோ என எண்ணினேன்.

அவர் கூறியது வேறு.

"இன்று காலையில் எழுந்தது முதல் என் மனதில் ஒரே ஆனந்தமாக இருக்கிறது. ஏன் இப்படி ஏற்பட்டது என்று தெரியவில்லை. நான் எதுவுமே செய்யவில்லை. அதுவாகவே இவ்வாறு ஏற்பட்டுள்ளது."

– இவ்வாறு அவர் தெரிவித்தார்.

அவருக்கு நிகழ்ந்தது என்ன?

**மனதின் பிரச்சினைகளை நாம் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளும் போது, அவை தாமாக ஓடி மறைய ஆரம்பித்து விடுகின்றன.** அவை நம்மிடம் சுழன்று கொண்டிருக்கும் போது ஏற்பட்ட அழுத்தம் நீங்குவதன் காரணமாக அது ஒரு விடுதலையாகவும், விடுபட்டதால் ஏற்பட்ட ஆனந்தமாகவும் வெளிப்பட்டுள்ளது.

மனரீதியான பிரச்சினைகளுக்கு எப்படித் தீர்வு காண்பது?

மனரீதியான பிரச்சினைகளிலிருந்து விடுபட வேண்டும் என்ற எண்ணமே, அந்தப் பிரச்சினையை மேலும் சிக்கலாக்கி விடுகிறது.

மனதில் ஏற்படும் உணர்ச்சிகளில் குற்றம் காண்பதுதான் மனப்பிரச்சினையை நீடிக்க வைத்து விடுகிறது.

**மன இயக்கத்தை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்வது என்பது உங்களை நீங்களே மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்வதாகும்.**

உங்களை நீங்கள் மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளும்போது

நீங்கள் ஒரு பிரவாகமாகப் பெருக்கெடுத்து ஓட ஆரம்பித்து விடுகிறீர்கள்.

உங்கள் பிரச்சினைகள் அனைத்தும் அந்த ஓட்டத்தோடு ஒட்டமாக ஓடி மறைந்து விடுகின்றன.

மனதளவில் பிரச்சினையற்ற நீங்கள் இனி

புறச்செயல்களை நெறிப்படுத்துவதிலும் அக்கறை காட்டலாம்.

அதற்காகக் கெடுபிடிகளில் இறங்கி புறப்பிரச்சினைகள் அனைத்தையும் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வரவேண்டும் என்று அர்த்தமில்லை.

புறச்செயல்களையும் மென்மையாகவும், செய்ய வேண்டிய முறைபடியும் செய்ய வேண்டும்.

இப்படி நீங்கள் செயல்பட்டால் உங்கள் மனைவியின் செயல்பாடு மாறிவிடுமா?

உங்கள் வீட்டுக்கு உங்களுடைய நண்பர் தனது நான்கு வயது குழந்தையுடன் வருகிறார் என வைத்துக் கொள்வோம்.

நீங்கள் அவர்களுடன் எவ்வாறு உரையாடுவீர்கள்?

உங்கள் நண்பரிடம் சகஜமாகப் பேசுவீர்கள். உங்கள் நண்பரிடம் பேசுவதைப் போலவே அவருடைய குழந்தையிடமும் பேசுவீர்களா?

"ஏண்டா ராஸ்கல்! உனக்காக எவ்வளவு நேரம்டா காத்திருப்பது?" என்று நீங்கள் உரிமையாகக் கூட அவரைக் கோபித்துக் கொள்ளலாம்.

அப்படி நீங்கள் அந்தக் குழந்தையிடம் பேசினால் அது உங்களைக் கண்டு பயந்து ஓடிவிடும்.

அந்தக் குழந்தையிடம் நீங்கள் எவ்வாறு பேசுவீர்கள்?

நீங்களும் ஓரளவு அந்தக் குழந்தையின் வயதுக்கு இறங்கி வந்து ஒரு குழந்தையைப் போன்று கொஞ்சும் மொழியிலேயே அதனுடன் பேசுவீர்கள்.

நீங்கள் இப்படிப் பேச வேண்டும் என்று அந்தக் குழந்தை உங்களைக் கேட்டுக் கொண்டதா?

குழந்தையைப் பார்த்ததும் உங்களையறியாமலேயே நீங்களும் குழந்தைக்கேற்ப மாறி விட்டீர்கள்.

**இப்படி உங்களுக்கு நீங்களே மாறி விடும்போது உங்களோடு தொடர்பு கொள்ளும் உங்கள் மனைவியின் அணுகுமுறையும் மாறிவிடும்.**

– இவற்றையெல்லாம் அவரிடம் எடுத்துக் கூறினேன்.

அவர் விடைபெறும்போது அவர் முகத்தில் படர்ந்திருந்த இருள் விலகி விட்டிருந்தது.



# கேள்வி? பதில்...

V.A.P. சரவணன், சேலம்.
செல் : 99942 05880

## நான் என்ற தன்மைக்கு வேலை உண்டா? இல்லையா?

**கேள்வி :** தானாக வரும் எண்ணம் Thought. தானாக வரும் எண்ணத்தின் மீது நம்முடைய முயற்சியின் பங்களிப்பே Thinking. சிந்தனை, சிந்திப்பு, அகம், புறம் என்பது எல்லாம் நன்றாக புரிகிறது. இதைப்போல் 'நான்' என்பது மட்டும் இன்னும் சரியாக புரியவில்லை. "நான் என்ற அகங்காரம் தான் எல்லாப் பிரச்சனைக்கும் மூலகாரணம்" என்று கூறுகிறார்கள். நான் என்ற அகங்கார தன்மையிலிருந்து நான் எப்படி விடுபடுவது?

**பதில் :** நான் என்பதும் கூட ஓர் எண்ணம் தான். எண்ணம் என்பது அனுபவம், அனுபவிப்பான் (நான்) என்ற இரண்டு பகுதியும் சேர்ந்த தொகுப்பே ஆகும். நமக்கு மனதில் எண்ணம் முதலிலும் அதனை தொடர்ந்து எனக்கு (நான்) எண்ணம் வந்திருக்கிறது என்பதையும் சேர்ந்தே தான் ஓர் எண்ணமாக உணர்கிறோம். நமது மனதில் இரண்டு பகுதியாக தெரிந்தாலும் அவை ஒரே எண்ணத்தின் இரண்டு பகுதியே ஆகும்.

இந்த இரண்டு பகுதிகளில் 'நான்' என்ற பகுதி அனுபவத்தை தன்னுடைய கட்டுபாட்டில் கொண்டு வர முயற்சி செய்கிறது. ஒரே எண்ணத்தின் இரண்டு பகுதிகள் ஒன்றை மற்றொன்று கட்டுப்பாட்டிற்கு கொண்டுவர முயல்வதே போராட்டமாக அமைந்துவிடுகிறது. இது ஒரே எண்ணத்தின் இரண்டு பகுதிகளில் ஏற்பட்ட சுயமுரண்பாடே ஆகும். இந்த போராட்டம் என்றும் முடிவுக்கு வராது. நான் என்பது கூட எண்ணத்தின் ஒரு பகுதிதான் என்பதை புரிந்து கொண்டு தன்னுடைய இயலாமையை உணர்ந்துகொண்டு அனுபவத்தை கட்டுப்பாட்டிற்கு கொண்டு வரும் முயற்சிகளிலிருந்து விடுபடுகிறது.

அகத்தில் எண்ணம் தாமாக ஏற்படுகிறது. நாம் எதிர்கொள்ளும் புற விசியமும் மனோமயமாக்கப்பட்டே அகத்தில் எண்ணமாக தோன்றுகிறது, அகம், புறம் என எப்படி இருந்தாலும் மனோமயமாக்கப்பட்டு உணர்வதையே நாம் எண்ணமாக உணர்கிறோம்.

கனவு இல்லாத ஆழ்ந்த உறக்கத்தின் போது மட்டும் தான் 'நான்' என்பது நமக்கு தெரியாது. விழித்திருக்கும் மற்ற எல்லா நேரங்களிலும் 'நான்' என்பது இருந்து கொண்டே தான் இருக்கும். 'நான்' என்ற தன்மை அகத்திலும் புறத்திலும் என எப்போதும் இருப்பதினால் நமக்கு எந்தப் பிரச்சினையும் இல்லை. 'நான்' தன்மைக்கு எங்கு வேலை இருக்கிறது, எங்கு வேலை இல்லை என்பதை புரிந்து கொள்வது தான் முக்கியம். 'நான்' என்பதை அகத்தில் எப்படி பார்க்க வேண்டும். புற இயக்கத்தில் எப்படி பார்க்க வேண்டும் என்ற புரிதல்தான் தேவை.

ஓர் உதாரணத்தின் மூலம் அகம், புறத்தில் 'நான்' என்ற தன்மையைப் புரிந்து கொள்வோம்.

"உடனே புறப்பட்டு வரவும், நாங்கள் கார் விபத்தில் சிக்கிக்கொண்டோம்" 100 கிலோ மீட்டர் தொலைவில் இருக்கும் ஓர் இடத்தை குறிப்பிட்டு, சீக்கிரம் புறப்பட்டு வரவும் என்று படபடப்புடன் நமது மிக நெருங்கிய உறவினர் போன் பேசிவிட்டு வைத்துவிடுகிறார். உடனே பய உணர்வு நமது அகத்தை அப்படியே கவ்விக்கொள்ளும். 'யாருக்கு என்ன ஆயிருக்குமோ' என்று படபடப்பும், பதட்டமும் ஏற்படும். நாம் அப்படியே நிதானமின்றி பதறுவோம்.

இப்படி நமக்கு ஏற்படும் பய உணர்ச்சிக்கு நாம் எதுவும் செய்ய முடியாது. நமக்கு ஏற்பட்டுள்ள பய உணர்ச்சியை நமது கவனமே இன்றி மாற்ற முயன்றால் தவறில்லை. இந்த பய உணர்ச்சியும் ஓர் எண்ணம் தானே. பயப்படுபவனாகிய 'நான்' இந்த பய உணர்ச்சியை நம்மால் மாற்ற முடியாது என்பதை புரிந்து கொள்வது தான் ஞானம். 'நான்' தன்னுடைய இயலாமையை புரிந்துகொண்டு பய உணர்ச்சியை எதிர்த்து செயல்படுவதிலிருந்து விடுபடுகிறான். கொஞ்ச நேரத்தில பய உணர்ச்சியை நிர்வாகம் செய்யும் எந்த பொறுப்பும் தனக்கு இல்லை என்பதை 'நான்' புரிந்துகொள்கிறான். இப்படி அகத்தில் 'நான்' என்ற தன்மையை புரிந்து கொள்ள வேண்டும்.

இப்படி புரிந்து கொண்ட அதே நேரம் புறத்தில் "நாம் அந்த விபத்து நடந்த இடத்திற்கு எப்படி பயணம் மேற்கொள்ளலாம்? எப்படி போனால் நம்மால் விரைவாக விபத்து நடந்த இடத்திற்கு போக முடியும்?" விபத்து நடந்த பகுதியில் நமக்கு தெரிந்த நபர்கள் யாராவது இருந்தால் அவர்களை விரைவாக சென்று அவர்களுக்கு உதவுமாறு போன் செய்து சொல்லலாம். அந்த பகுதியில் உள்ள நல்ல மருத்துவமனை பற்றிய விபரம், காப்பீடு பற்றிய விபரங்கள் இருந்தால் அவைகளை பற்றிய விபரங்களை சேகரித்துக்கொண்டு நல்ல நண்பர்கள், உறவினர்கள் சிலரையும் நம்முடன் அழைத்துக்கொண்டு விரைவாக விபத்து நடந்த பகுதிக்கு நாம் செல்லலாம்.

மேற்சொன்ன அத்தனை புறவிசயமும், மனோமயமாக்கப்பட்டே அகத்தில் எண்ணமாக உணர்கிறோம். இந்த சூழ்நிலையில் எதை எடுக்கவேண்டுமோ, அதை எல்லாம் எடுத்துக்கொண்டு யார் யாருக்கு போன் பேசி கூப்பிடவேண்டுமோ அவர்களை கூப்பிட்டு விபத்து நடந்த பகுதிக்கு விரைவாக செல்வதற்கு தேவையான அத்தனை புறச்செயல்களையும் திறம்பட செய்வதற்கு 'நான்' தேவை.

நான் என்பது அகத்தில் தோன்றும் பய உணர்ச்சியை நிர்வாகம் செய்யத் தேவையில்லை என்ற புரிதலுடன் புறச்செயலுக்கு தேவையான செயல்களை செய்வதற்கான உத்வேகத்துடன் செயல்பட, 'நான்'யை பயன்படுத்திக் கொள்ள வேண்டும். **அகத்தில் 'நான்' போராடாத போது புறத்தில் செயலை செய்வதற்கு தேவையான சக்தியை பய உணர்வே நமது 'நான்' -க்கு வழங்கி விடுகிறது.**

புறச்செயல் தேவைப்படாத மற்ற நேரங்களில் நான் என்ற தன்மைக்கு எந்த வேலையும் இல்லை என்ற புரிதலுடன் அப்படியே, சுதந்திரமாக விட்டு விட வேண்டியது தான். நாம் அப்படி விட்டுவிடும் போது 'நான்' என்ற தன்மை இருக்க தான் செய்யும். அது கானல் நீரைப் போல் இருப்பது போல் தெரிந்தாலும் உண்மையில் இல்லாத மாயத்தோற்றமே ஆகும்.

**'நான்' அகத்தில் போராடாத போது எல்லா உணர்வுகளும் நம்மை விட்டு விடுதலையாகும். 'நான்' யை புறத்தில் பயன்படுத்திக்கொள்ளும் தோறும் நமது செயல்கள் சிறப்புறும்.**




வரைபடம் தயாரித்து அனுப்பிய திரு. **ஜெயராம்,** கனடா அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.



# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891 65555

அனைவருக்கும் சகப் பயணியின் வணக்கம்.

ஸ்ரீ பகவத் ஐயா வழங்கும் ஞானப் புரிதலால் பலரும் தங்களது மனப்போராட்டங்களில் இருந்து விடுபட்டு விடுதலையோடு வாழ்ந்து வருகிறார்கள்.

கல்லூரியில் முதுநிலையில் இறுதி ஆண்டு படிக்கும் இளைஞர் ஒருவர் என்னிடம் அலைபேசியில் தொடர்பு கொண்டார்.

"என் கல்விக்குத் தடையாக பல எதிர்மறை எண்ணங்கள் எனக்கு வந்து கொண்டு இருந்தன. இதிலிருந்து விடுபடவேண்டும் என்பதற்காக பல ஆன்மிக நூல்களை படிக்க ஆரம்பித்தேன். மோசமான, அறுவறுப்பான எண்ணங்களிலிருந்து விடுபட்டால்தான் படிப்பின் பக்கம் கவனம் திரும்பும் என ஐந்து வருடமாக போராடி வந்தேன். ஆனால் பாதிப்பு அதிகமானதே தவிர, போராட்டம் முடிவுக்கு வரவில்லை. ஸ்ரீ பகவத் ஐயாவின் **'சிந்தனையும் சிந்திப்பும்'** படித்த பிறகுதான் தெரிந்து கொண்டேன். என் கவனம் முழுவதும் என் எண்ணங்களின் பக்கம் திரும்பியதுதான் தவறு. புறச் செயலின்பக்கம் திரும்ப வேண்டும் என்பதை புரிந்து கொண்டேன். தேவையில்லாமல் ஐந்து ஆண்டுகளை வீணடித்துவிட்டேன் என்பது வருத்தத்தை கொடுக்கிறது. என் தவறை புரிந்து கொண்டேன். இப்போது மீண்டும் ஒரு புதுப் பிரச்சினை வந்துவிட்டது. என் கவனம் என் எண்ணங்களின் பக்கம் திரும்பக்கூடாது என்று எவ்வளவு கவனமாக இருந்தாலும் நான் படித்துக் கொண்டிருக்கும்போது என் கவனம் என்னையறியாமல் படிப்பிலிருந்து எண்ணங்களின் பக்கம் திரும்பி 'இது சரி, இது தவறு' என்று ஆராய தொடங்கிவிடுகிறது. இது தவறு என்று தெரிந்தும் இதிலிருந்து விடுபட முடியாமல் தவிக்கிறேன் என்ன செய்வது?" என்று கேட்டார்.

எதிர்மறை எண்ணங்களிலிருந்து (Negative Thoughts) விடுபடவேண்டுமென்று ஐந்தாண்டுகளாக போராடிக் கொண்டிருந்த இவர், தன்னுடைய போராட்டத்தை வேறு கோணத்தில் மாற்றிக் கொண்டு மீண்டும் போராடிக் கொண்டிருக்கிறார் என்பதே உண்மை.

நாம் புரிந்து கொள்ள வேண்டியதே 'நமது மனம் எப்படி வேண்டுமானாலும் இருக்கலாம். அதனை சரி செய்ய வேண்டிய கடமை நமக்கு எதுவும் இல்லை' என்பதே. புரிந்து கொள்வதோடு நமது வேலை அனைத்தும் முடிந்துவிடுகிறது. புரிதலை செயல்படுத்த வேண்டிய அவசியம் எதுவும் இல்லை. அகத்தில் செயல்பட தேவையில்லை என்று புரிந்து கொள்வதை எப்படி செயல்படுத்துவது? நம்மையறியாமல் நமது கவனம் நம் எண்ணத்திற்குள் செல்வது நமது செயல் அல்ல. நமது கவனத்திற்கு வந்த பிறது செய்யும் செயலே நமது செயல் என்பதையும் புரிந்து கொள்ள வேண்டும்.

- இந்த விளக்கத்தை பெற்ற அவர் தன் மனதை அது எப்படி உள்ளதோ அப்படியே முழு மனதோடு ஏற்றுக்கொண்டுவிட்டார். அவரது போராட்டமும் முடிவுக்கு வந்துவிட்டது.

ஐயாவின் நூல்களை படிப்பதோடு மட்டுமல்லாது ஞானமுகாம்களிலும் சத்சங்கத்திலும் கலந்து கொண்டு நமது புரிதலை உறுதி (Confirmation) செய்து மிகவும் அவசியம். இந்த எளிமையான புரிதலே நாம் புரிந்துகொள்ள வேண்டிய ஞானப்புரிதல் என்ற முடிவுக்கு வருவதே அகத்தேடுதலையும் போராட்டத்தையும் முடிவுக்கு கொண்டுவரும்.

இந்த வகையில் வெளிநாட்டவர்கள் பலரும் திருவண்ணாமலையில் ஜனவரி 20 ஆம் தேதி முதல் 23 ஆம் தேதிவரை ஆங்கிலத்தில் நடைபெற்ற ஞானமுகாமில் கலந்து கொண்டு பயனடைந்தனர். இவர்களோடு சென்னை அன்பர்களும் கலந்து கொண்டனர்.

நமது ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் ஆர்வம் கொண்ட திருவண்ணாமலை திரு. **கார்த்திகேயன்-ஹரிவைதேகி** தம்பதியினர் நமக்கு உணவளித்து உபசரித்ததோடு தங்களது இல்லத்தை ஸ்ரீ பகவத் மிஷனின் திருவண்ணாமலை மையமாக இருந்து செயல்பட விருப்பம் தெரிவித்துள்ளனர். இவர்களுக்கு ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

மேலும் சென்னை வேளச்சேரியில் நடைபெற்ற 9வது இந்து ஆன்மிக மற்றும் சேவை அமைப்பின் (HSSF) புத்தக கண்காட்சியில் நமது ஸ்ரீ பகவத் மிஷன் ஸ்டால் இடம் பெற்றது. ஐயாவின் ஞான நூல்களை பலருக்கும் எடுத்துச்செல்ல இது மிகவும் பேருதவி புரிந்தது. இதனை ஏற்பாடு செய்திருந்த L & T திரு. **இரவிசந்திரன் ஐயா** அவர்களுக்கும் இதனை தலைமை ஏற்று நடத்திய ஸ்ரீ பகவத் மிஷன் சென்னை மையத் தலைவர் திரு. **இரவிச்சந்திரன்** அவர்களுக்கும் இவர்களுடன் இணைந்து சிறப்பாக செயலாற்றிய

திரு. **ஜெகதீசன்,** திரு. **ஆனந்த்,** திரு. **முரளி,** திரு. **சுரேந்திரர்,** திரு. **கோபாலகிருஷ்ணன்,** திரு. **TMK. தியாகராஜன்,** திரு. **சீத்தாராமன்,** திரு. **கணேஷ்,** திரு. **மாரிமுத்து,** திரு. **விபாகரன்,** திரு. **தேவராஜ்,** திரு. **அருண்,** திரு. **P.P. விஸ்வநாதன்,** திரு. **P. சுந்தரராஜன்,** திரு. **முத்துலட்சுமி சரவணன்,** திரு. **ராம்லால்** மற்றும் இதற்கு துணை நின்ற அனைவருக்கும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றிகளையும் பாராட்டுகளையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

நாம் புரிந்து கொள்வதோடு புரிதலை தேடுதல் கொண்ட அனைவருக்கும் கொண்டு செல்வது மனித குலத்திற்கு செய்யும் மாபெரும் தொண்டாகும்.

**புரிந்து கொள்வோம்... புரிதலை பகிர்வோம்...**



# ஸ்ரீ பகவத் பவன்

## புரவலர்கள்

அன்பு உள்ளங்களுக்கு ஓர் அன்பான வேண்டுகோள்.

ஸ்ரீ பகவத் மிஷன் என்பது பணப்புழக்கம் மிகுந்த ஒரு கார்ப்பரேட் நிறுவனம் அல்ல. கட்டணம் வாங்கிக் கொள்ளும் கல்வி நிறுவனமும் அல்ல. ஐயா அவர்களுக்கு தங்கியிருக்க வீடு ஒன்று தேவைப்பட்டது. நம் அனைவரது ஒத்துழைப்பாலும் **ஸ்ரீ பகவத் பவன்** உருவானது. தற்போது அந்த இல்லம் ஐயாவின் இருப்பிடமாகவும், கற்றிட வருவோரின் குருகுலமாகவும், நம் அனைவரது பண்ணைவீடாகவும் செயல்பட்டு வருகிறது. ஸ்ரீ பகவத் பவனின் நித்திய நிர்வாகச் செலவினங்களுக்கான நித்திய நிதி ஒன்றும் தேவைப்படுகிறது.

'நிரந்தர வைப்பு நிதி எதனையும் தற்போது உருவாக்க வேண்டாம்' என்று ஐயா கூறிவிட்டதால் நிரந்தரப் புரவலர் குழு ஒன்றை உருவாக்க முடிவு செய்துள்ளோம். முதற்கட்டமாக 100 ஆர்வலர்கள் கொண்ட புரவலர் குழு ஒன்று மே மாதம் முதல் தொடங்கப்பட்டுள்ளது. அதன்படி ரூ. 1000/- முதல் ஏதாவது ஒரு தொகையை மாதந்தோறும் அல்லது ரூ. 12,000/- முதல் ஏதாவது ஒரு தொகையை வருடந்தோறும் வழங்கும் ஆர்வம் உள்ளவர்கள் தங்களை ஸ்ரீ பகவத்பவனின் புரவலர்களாக இணைத்துக் கொள்ளலாம். **அதற்காக ஏற்றுக்கொண்ட முழுத்தொகையையும் மாதந்தோறும் வழங்கியே ஆகவேண்டும் என்ற நிபந்தனை எதுவும் புரவலர்களுக்குக் கிடையாது.**

நமது வேண்டுகோளை ஏற்று இம்மாதத்தில் புரவலர் இணைந்தவர் திரு. **சத்தியமூர்த்தி ரத்தினம்,** கனடா.

புரவலர்களாக தங்களை இணைத்துக்கொண்ட அனைவருக்கும் ஸ்ரீபகவத் மிஷன் சார்பில் உளமார்ந்த நன்றியையும் பாராட்டுகளையும் தெரிவித்துக்கொள்கிறோம். வாய்ப்புள்ளவர்கள் புரவலர்களாக இணைந்து உதவிட வேண்டுகிறோம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank Sri Bagavath Mission A/c No. 1590762000075, NEFT IFSC : HDFC 0001590 Car Street Branch, Salem** என்ற கணக்கில் செலுத்தலாம். **Bank A/c-** ல் நேரடியாக செலுத்தியவர்கள் தகவலை **97891 65555** என்ற எண்ணிற்கு தெரிவிக்க வேண்டுகிறோம்.

## ஸ்ரீ பகவத் மிஷன் திருவண்ணாமலை மையம்

ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் அனைத்து நூல்களும் பகவத் பாதை மாத இதழ்களும் இங்கு கிடைக்கும்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**
திருவண்ணாமலை மையம், 15/5, 2வது தெரு,
சோமவாரகுலத்தெரு, திருவண்ணாமலை - 606 603.

திரு. **கார்த்திகேயன்** - திருமதி **ஹரி வைதேகி** தம்பதியர் இதன் பொறுப்பாளர்களாக இருந்து செயல்படுவார்கள் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்கிறோம்.
**செல் : 98842 83699**

# நிகழ்ச்சி நிழல்கள்



திருவண்ணாமலை சத்சங்கத்தில்



திரு. TMK. தியாகராஜன் ஐயா அவர்களும் திரு. இரவிச்சந்திரன் ஐயா அவர்களும்










இந்து ஆன்மிகம் மற்றும் சேவை அமைப்பின் புத்தக கண்காட்சியில் நமது ஸ்ரீ பகவத் மிஷன் ஸ்டால்

## கோடையில் இயற்கை சூழல் மிகுந்த ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 3 நாள்
# சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : House of Peace (Glass House) அமைதி இல்லம், ஏற்காடு.
நாள் : 27-4-2018 வெள்ளிக்கிழமை மதியம் 1 மணி முதல்
29-4-2018 ஞாயிறு மாலை 3.00 மணி வரை

### தலைப்புகள் :

1. ஞானப்புரிதல்
2. அகம்-புறம்
3. நான் யார்?
4. நினைவும் சிந்தித்தலும்
5. மனோலயம் - மனோ நாசம்
6. கர்மவினை
7. தெளிவில் உறுதி



- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 3000/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் மார்ச் 31ம் தேதிக்குள் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

**முன்பதிவு செய்யும் வழிகள் :**

**M.O, D.D. (or) Cheque :** வரைவோலை அனுப்புபவர்கள் : A/c. Sri Bagavath Mission என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

**Direct Payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC : HDFC 001590 என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

**Online Payment :** Credit Card or Debit Card மூலம் www.sribagavathmission.org என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**

31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம்-3. கைப்பேசி : **9994205880, 97891 65555**

## ஸ்ரீ பகவத் பவன்

ஸ்ரீ பகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவனின் ஒவ்வொரு மாதமும் ஞான முகாம் கட்டணமின்றி இலவசமாக நடந்து வருகிறது. ஞானமுகாம்களில் கலந்து கொள்பவர்கள் எண்ணிக்கை அதிகரித்து வருவதாலும், மற்ற நேரங்களில் ஐயாவை சந்திக்க வருபவர்களின் எண்ணிக்கையும் அதிகரிப்பதாலும் நாம் மேலும் பல செலவுகளை எதிர்கொள்ள வேண்டியுள்ளது.

நாம் எதிர்கொள்ளும் செலவுகளை ஸ்ரீ பகவத் மிஷனுக்கு வரும் நன்கொடைகளையும் நிறுவனர்கள் மற்றும் புரவலர்களின் பங்களிப்பையும் கொண்டு மட்டுமே எதிர்கொண்டு வருகிறோம். அந்த வகையில் ரூபாய் **25,000/-** வழங்கி ஸ்ரீ பகவத் பவனின் நிறுவனராக தங்களை இணைத்துக்கொண்ட திருமதி **G.K. சந்திரா,** திண்டுக்கல் அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம். பகவத் ஐயாவின் கருத்துகளை புரிந்து கொண்டவர்களும் அனைவருக்கும் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர்களும் வாய்ப்புள்ளவர்களாக இருக்கும் பட்சத்தில் நன்கொடைகளை வழங்கி நிறுவனர்களாகவும், புறவலர்களாகவும் இணைந்து ஸ்ரீ பகவத் மிஷனின் தொண்டில் தங்களையும் இணைத்துக் கொள்ளுமாறு பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

அன்புடன்
Sri Bagavath Mission



# ஜென் கதை

## "மனம் என்னும் மாயை"

வானம் மை இருட்டாய் இருந்தது.

நட்சத்திரங்கள் கூடத் தெரியவில்லை. அந்தப் சாதகன், கடுமையான பாதையில், கடும் காற்றில், காரிருளில் தள்ளாடியபடி நடந்து போய்க் கொண்டிருந்தான்.

எப்போதோ தொடங்கிய புனிதப் பயணம் அது. ஞானம் பெற காடு மலைகளுக்கு அப்பாலுள்ள குருவைத் தேடிச் செல்கிறான் அந்த சாதகன்.

கால்கள் தொய்ந்து போகின்றன. பசி, தாகம் எல்லை மீறிப் போகிறது. வெளியிருட்டு அல்லாமல், கண்களும் இருட்டிக் கொண்டு வருகின்றன.

"இனி அவ்வளவுதான், முடியாது" என்று அவனுக்குத் தோன்றுகிறது. "நாம் குருவைக் காணப் போவதில்லை. ஞானம் பெற போவதில்லை. நம் உயிர் இங்கேயே பிரியப் போகிறது" என்று நினைத்தான், அந்த சாதகன்.

கீழே சுருண்டு விழப் போகும் தருணத்தில் கால்களில் ஏதோ இடறியது.

குனிந்து பார்த்தான்.

ஒரு வெள்ளிப் பாத்திரம்! அதில் நிறையத் தண்ணீர்! பனி உருகிய தூய நீரைப் போல் தோன்றியது!

அவன் மிகவும் மகிழ்ந்து, அதை எடுத்துப் பருகினான். தாகம் தீர்ந்தது. மண்டியிட்டுப் பிராத்தனை செய்தான். பிறகு அப்படியே சுருண்டு சாய்ந்து உறங்கிப் போனான்.

காலை மலர்ந்தது. பறவைகள் பாடின. சூரிய ஒளி உடலைச் சூடேற்றியது.

சாதகன் கண் விழித்தான். விழித்ததும் முதலில் நினைவிற்கு வந்தது வெள்ளிப் பாத்திரம்தான்! அங்கும் மிங்கும் தேடிப்பார்த்தான்.

அங்கே ஒரு மண்டையோடுதான் கிடந்தது! அதில் தேங்கிய தண்ணீரைத்தான் அவன் முந்தின இரவு குடித்திருக்கிறான்!

நெருங்கிப் பார்த்த போது பகீறென்றது! புதிய மண்டையோடு! அதில் இன்னும் கொஞ்சம் சதை, மூளையெல்லாம் ஒட்டிக் கொண்டிருந்தது! நாற்றம் வீசியது! இரவில், கொடிய தாகத்தில் ஒன்றுமே தோன்றவில்லை.

அதை நினைத்துக் கொண்டதும், குமட்டிக் கொண்டு வந்தது. குபீரென்று வாந்தி எடுத்தான்.

முந்தின இரவு மண்டை ஓட்டை வெள்ளி பாத்திரமாக காட்டிய மனதின் மாயையும் இன்று யதார்த்தில் அது மண்டை ஓடுதான் என்பதையும் புரிந்து கொண்டான்.

அந்தக் கணத்தில் அவனுக்கு ஞானம் பிறந்தது!

அவன் பிறகு பயணத்தை மேலே தொடரவில்லை. வீடு திரும்பி விட்டான். தேடிப் போனது நடு வழியிலேயே கிடைத்து விட்டது.

அவனுக்கு அந்த மண்டையோடே குருவாக அமைந்து விட்டது!

**நம் மனம் ஒரு விசியத்தை எப்படி புரிந்து கொள்கிறதோ, அதற்கு ஏற்ற உணர்வுகளையே நம்மிடம் இருந்து வெளிப்படுத்துகிறது என்பதை புரிந்து கொண்டான்.**

மனதின் இயலாமையை இப்படி புரிந்து கொண்டு மனம் செய்யும் மாய விளையாட்டிலிருந்து விடுபட்டான்.

யதார்த்த உலகத்தை அறிவுப்பூர்வமாக எதிர்கொள்ளும் தன்மைக்கே வந்துவிட்டான்.




Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698
Postel Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020 Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003. Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555